# கொரட்டிக் கருப்பர் வழிபாட்டு நூல்

228

IMS0228



ஆரடிச் சாத்தய்யனர் மண்டபம், கொரட்டி

காரைக்குடி சா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார்

சாந்தி வெளியீடு - சௌமிய - வைகாசி - 9௨

உ
சிவமயம்

# கொரட்டிக் கருப்பர் வழிபாட்டு நூல்



காரைக்குடி
சா. நா. அ. அழ. அ.
அழகப்ப செட்டியார் சாந்தி
வெளியீடு

சௌமிய, வைகாசி, 9௨
22-5-69

உ
சிவமயம்

# முன்னுரை

வழிபடு தெய்வமாகிய கொரட்டிக் கருப்பர் பேரிலும், அடைக்காத்தாள் மீதும் முன்னே பாடிவைக்கப் பெற்ற பாடல்களின் தொகுப்பு நூல் இது. அப் பாடல்களோடு சில தெய்வங்களின் வழிபாட்டுப் பாடல்களும் இதில் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. மொத்தம் இந்நூலில் அகவல் உள்பட 36 பாடல்கள் இருக்கின்றன.

கொரட்டிக் கருப்பரை வழிபடுவோர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

இந்நூலை எங்கள் தகப்பனர், திரு சா. நா. அ. அழ. அ. அழகப்பசெட்டியார், தாயார், திருமதி விசாலாட்சி ஆச்சி ஆகியோரின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா நினைவாக வெளியிட்டு மகிழ்கிறோம்.

சௌமிய
வைகாசி 9
22-5-69

அழ. அருணசலம்
அழ. இராமசாமி



## விநாயகர்

பாலும் தெளிதேனும்
பாகும் பருப்பும்இவை
நாலும் கலந்துஉனக்கு
நான் தருவேன்:—கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத்
தூமணியே! நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா. 1

## இலக்குமி

காடுவெட்டிப் போட்டுக்
கடிய நிலம்திருத்தி,
வீடுகட்டிக் கொண்டுஇருக்கும்
வேள்வணிகர்—வீடுகட்கு
அன்றைக்கு வந்தளங்கள்
அம்மா! இலக்குமி, நீ
என்றைக்கும் நீங்காது இரு. 2

## முருகன்

செந்தில்வளர் விநாயகனே! சிவனே! உம்தம்
சீர்ப்பாதம் போற்றிசெய்து சிறப்பாய்ப் பாட,
வந்துதமிழ் வாக்குஅருளும் வாணித் தாயே!
மலர்அடியை நான்அடியேன் வருந்தி நித்தம்
தந்திரமாய்ச் சடாக்ஷரத்தைத் தியானம் செய்யச்
சரஸ்வதியும் சாமுண்டி வீர பாகும்
செந்தில்வளர் விநாயகனே! முருகா! அய்யா!
சீர்ப்பாதம் எந்நாளும் சரணம் காப்பே. 3

## காரைக்குடி ஐயனர்

மெய்ஞ்ஞான தெய்வம்; விரும்பி-
னவர்க்கு மிகுந்தவரம்
பொய்யாம லேதரும் பொய்சொல்லா
மெய்ப்பெயர் பூண்டதெய்வம்;
எய்யாமல் எங்கள் குடிமுழுது
ஆள இருந்ததெய்வம்:
செய்யூடு காரைப் பதிவாழும்
ஐயர்தாள் சென்னியவே. 4

## காரைக்குடிக் கொப்புடைஅம்மன்

வங்காரம் ஆனதொரு கொப்புநின்று ஆட,
வயிரமூக் குத்திஆட,
மார்பிலே தும்பிப் பதைக்கம்நின்று ஆட,
மடியில்ஒரு மாலை ஆட,

சிங்காரம் ஆனதொரு கனகதண் டிகைமீது
தெருவீதி பவனி வருவாய்!
சென்னியே கன்னிவளர் செஞ்சைமா நகர்மேவு
தேவி! கொப்புடை அம்மனே! 5

## குன்றக்குடி முருகன்

பூரணி, பராசத்தி, தேவி, அம் பிகைதரும்
புதல்வனே! பொதிகை மலைவாழ்
புகல்அரிய குறுமுனிக் குத்தமிழ் உரைத்திடும்
புலவனே! புலவர் கோனே!

காரணி கறைக்கண்ட னுக்குஅருள் உபதேசம்
கருதுமெய்ஞ் ஞான குருவே!
கண்கள்ஈ ராறுடைய கடவுளே! கந்தனே!
கரியவண்டு ஆர்க டப்பம்

தார்அணியும் மார்பனே! தமிழ்கொண்ட நக்கீரர்
தன்துயர் தவிர்த்து அருள்செயும்
சத்திவடி வேல்கரத்து அணியும்முரு கையனே!
தனயர்தந்து அருள்பு ரிகுவாய்!

கோரமிகு சூரசங் கார!சிங் காரனே!
குறவள்ளி தனைம ணந்த
கொன்றைசூ டியகோல மன்றுடி மைந்தனே!
குன்றை மாநகர் வேலனே! 6



பதினெட்டாம்படி கருப்பர்
கொரட்டி



நொண்டிக் கருப்பர்
இலங்குடி

5

## கருப்பர்

தாராள மாகவே உன்தன்பொற் கோயிலைத்
தடைஇன்றி வலமதாகித்
தாளிணைகள் துதிசெய்து போற்றி அபிடேகமும்
சாம்பிராணி தூபம் இட்டும்,

ஏராள மாகவே கற்பூர தீபமும்
எடுக்கின்ற தீப ஒளியும்
இலங்குமலர் அருச்சனை பூசைகள் செய்துமே
எப்போதும் ஏற்றி நிற்பேன்;

காரான குலதிலகன் இராமலிங் கேந்திரன்
கருதுமொழி தவறி டாமல்
காத்துஅருள் செய்திடும் உபாத்திஅண் ணாமலைக்
கவிஞன் ஈர்ஐந்து கவியால்

வாராத செல்வமும் வந்திட அருள்செய்யும்
வல்லயம் பதியில் மேவும்
மலைமீதில் அய்யனார் சந்நிதியில் எந்நாளும்
வாழ்,கருப் பண்ண சுவாமியே!

எப்போதும் உன்தன்இரு பாதார விந்தமலர்
யானுமே பணிய இலையோ?
ஏழைநான் சொல்லிடும் சொல்லெலாம் உந்தனுடை
இருசெவிக்கு ஏற்க இலையோ?

தப்பான காரியம் செய்தேனோ? எந்தன்மேல்
சற்று மேதயவு இல்லையோ?
தந்தை, தாய், சுற்றமும் நீ, எந்தன் அபயமும்
தான்; வந்து காக்க இலையோ?

ஒப்பான உமதுபணி செய்யாது இருந்தேனோ?
உன்கிருபை எந்தன் மீது
உறுதியுடன் வைத்துஅருள இதுதருணம்ஆகும்என்
உள்ளம் நினைத்த படியே

மற்பொருது மதயானை சூழவே எந்நாளும்
வல்லமா நகரில் மேவும்
மலைமீதில் அய்யனார் சந்நிதியில் எந்நாளும்
வாழ்கருப் பண்ண சுவாமியே! 8

சூதான ஓட்டியம், சல்லியம், பேய், பில்லி
சூனியம், ஏவல், பார்வை,
துட்டப் பிசாசுகள், வைப்பு, கடப்புகள்,
தொடர்பிர்ம ராட்ச தையுடன்

வாதாடு பூதமும், மதயானை, அரவமும்,
வன்புலி, சிங்கம் முதலாய்
வந்துஎதிர்த் தாலுமே உந்தனுடை பேர்சொலில்
மயங்கிமிக ஓடி விடுமே;

தீதான மந்திரம், மாரணம், பேதனம்
செய்பவர்கள் மேல்சி னந்து,
சிந்தைகள் கலங்கிட உந்தனது தண்டினல்
சிதறவே அடிக்கும் மெய்யா!

மாதுபூரணியுடன் புட்கலையு டன்கூடி
வல்லமா நகரில் மேவும்
மலைமீதில் அய்யனர் சந்நிதியில் எந்நாளும்
வாழ்,கருப் பண்ண சுவாமியே! 9

கட்டாரி, வில்,அம்பு, கையினில் பந்தமும்,
கலகலன ஓசை அதிரும்
காலிட்ட தண்டையும், மேலில்வரு கச்சையும்
கனமான தொங்கல் அழகும்

வட்டமிடு நெற்றியில் கத்தூரிப் பொட்டுடன்
மார்பில் பதைக்கம் ஆட,
வருடமொரு நாளிலே பெரும்பூசை தன்லிலே
வருகுவாய் கரிய வண்ணு!

சட்டமுடன் ஆகவே உன்னுடைய சந்நிதியில்
சனம்வந்து கூடி நிற்க,
தான்வந்து நல்வரம் தருகின்ற கருணையைத்
தமிழ்ப்பாவி னுல்,இ சைத்து,

இட்டமுடன் ஆசிரிய விருத்தமாய் இயம்பினேன்;
எழில்ஆர்ந்த கரிய மணியே!
ஏகஉல் லாசனே! கொரட்டிதனில் வாழ்கின்ற
இருங்கருப் பண்ண சுவாமியேI 10

உரிமைக் கருப்பனொடு சோனைக் கருப்பன்;
உடுளுதே ரடிக்க ருப்பன்;
உயர்அழகர் கோவில்பதி னெட்டாம் படித்துறை
உறங்காப் புளிக்க ருப்பன்;

அருமைக் கருப்பன்;மலை யாளக் கருப்பன்;
அமரா பதிக்க ருப்பன்;
அலைகடலில் நீருண்ட சப்தமே கங்களும்
அருண்டமே னிக்க ருப்பன்;

கருணைக் கருப்பன்;மிகு சமயக்க ருப்பன்;
கருஞ்சங் கிலிக்க ருப்பன்;
கட்டாணி முத்துக் கருப்பன்; கருப்பன்எனக்
கணக்கற்ற பெயர்க் கருப்பப்

பெருமைக் கருப்பனே! எங்கள்பிழை எல்லாம்
பெரிதும் பொறுத்து அருளுவாய்,
பெருகுபுனல் திகழ்ப்பனசை உயர்பதியில் மேவிய
பெரியகருப் பண்ண சுவாமியே! 11

நிலமதில் புகழ்பெற்ற எனதுகுல தெய்வமே!
நேசனே! மேக வண்ணா!
நின்அடிய ரைக்காக்க வே,பரியில் ஏறி,ஒரு
நிமிடத்தில் வந்துஉ தவுவாய்!

கலகலென மணிஓசை இடையினிற் சல்லடம்,
கருங்கச்சை, தொங்க லுடனே
கனமான கொன்றைச் சொருக்கு,உரு மாலுடன்
கட்டும், கையினில் பந்தொடு,

திலகமும் நெற்றியில் நாமமும், காதினில்
சேர்ந்திடு கடுக்கன், முருகும்,
சிங்கார மார்பில் பதைக்கம், சரப்பணி,
சிறந்த கைஅரி வாள்,கொடு,

தலமதில் கீர்த்தியுள கொரட்டிநகர் மேவிவளர்
தலைவனே! நீல மேகா!
தனத்தைமிக அருளிஎன் மனக்கவலை தீர்,ஐய!
சந்தனக் கருப்பண சாமியே. 12

கறுப்பனே துணைஎன்று இருப்பவர்கள் நெஞ்சினில்
காணாத காட்சி காணும்;
கருணைசே ரும்பதியை நோக்கிவரு வோர்கள்நோய்
கலங்கி யேபாய்ந்து ஓடிடும்;

மறுப்படா மேனியாய்! உன்பதம் சேவிக்க
மனத்தில் உறுதுயர் தீர்ந்திடும்;
வாழ்வுவரும்; நின்னுடைய கொலுமுகம் காணவே
மைந்தரொடு செல்வம் உண்டாம்;

வெறுப்பான பேய்களும் தத்தளித்து ஓடும்;உன்
வெண்ணீறு தனைஅ ணிந்தால்,
மேதினியில் ஞானமும், புத்தியும், கல்வியும்
மேன்மேலும் முத்தி உண்டாம்;

சிறப்பான பதியான கொரட்டிநகர் தனில்மேவு
தெய்வமே! நீல மேகா!
தினம்உனை வணங்குவேன், தீங்குஇன் றிக் காத்துஅருள்
செய்;கருப் பண்ண சாமியே! 13

உலகத்தில் உண்டான சகலஅடி யார்களும்
உன்னையே நினைந்தி ருக்க,
ஊழ்வினைகள் அணுகாமல், வேறுவினை வாராமல்,
உண்மையாக் காத்தல் செய்வாய்;

கலகங்கள் செய்கின்ற பேய்,பில்லி சூனியம்
காளிகள் பிடித்த போது,உன்
கலகலெனும் மணிஓசை கேட்டவுட னேபதின்
காதவழி ஓடி அழியும்;

புலவர்கள் பாடவும், நீஇருந்து ஆடவும்,
பொய்மை கள்பறந்து ஓடவும்,
பொங்கலுடன் அடியார்கள் காளாஞ்சி ஏந்தியே
போற்றிட வரம்கொ டுப்பாய்!

தலம்அதனில் ஒப்பற்ற கொரட்டிதனில் மேவும்ஒரு
தாணுவே! நீல மேகா!
தனம்எனக்கு அருளும்எம் கருப்பண்ண சுவாமியே!
தனையர்கள் அடிப ணிந்தேம். 14

ஆதார மாகவே ஈர்ஏழு லோகமும்
ஆளவே வந்த வனும்நீ;
அட்டாட்ச ரத்திலும் இட்டப்பிர காசமாய்
ஆனந்த மான வனும்நீ;

வேதாக மத்திலும் விண்ணிலும் மண்ணிலும்
விளங்கிவரு கின்ற வனும்நீ;
வித்துக்கு வித்தாய் முளைத்துஎழும் சோதியாய்
வெற்றி தரும்உத் தண்டன்நீ;

வாதாடு கின்றவர் மார்பைப் பிளந்திடும்
வாள்கைப் பிடித்த வனும்நி;
வையகம் புகழஉன் அடியார்கள் ஈடேற
வந்துஅவ தரித்த வனும்நீ;

மாதா,இ லக்குமி நீங்காது இருக்கின்ற
வல்லயம் பதியில் மேவும்
மலைமீதில் அய்யனார் சந்நிதியில் எந்நாளும்
வாழ்கருப் பண்ண சுவாமியே! 15

துடியாக வருகின்ற உத்தண்ட வீரமும்,
துள்ளுமி சைக்க றுப்பும்,
துலங்கு,கை அரிவாளும், நீலம். கருங்கச்சை
துப்பட்டு வல்ல பட்டும்,

வடிவான சாய்வுகொண் டைக்கட்டும், உருமாலும்,
வளர்காதில் ஒன்றும் முத்தும்,
வயிரமணி மேல்முருகு மார்பில்ப தைக்கமும்,
வச்ரமணித் தொங்கல் வளையும்,

கெடியான பேர்களை வெட்டியே வெற்றிகொள்
கெம்பீர மும்,வ ரங்கள்
கேட்டவர்க்கு அருள்செயும் கிருபா கடாட்சமும்,
கெழுமியே நின்அ டைந்த

அடியார்கள் வல்வினை அடிபட்டு விழவே
அபயம் கொடுத்து அருளியே,
ஆதரித் திடும்எங்கள் கருப்பண்ண சுவாமியே!
அருட்கடைக் கண்அ ளிப்பாய். 16

# கட்டியம்

அண்ணன் வாரார்; தம்பி வாரார்;
காயாம்பு நீலமேக வண்ணன் வாரார்; (அண்ணன்)
கச்சை மணி, சலங்கை கலகலஎன்றே ஒலிக்க ,,
ஈட்டி, சமுதாடு பளபளஎன மின்னவே ,,
வாள்எடுத்துக் கச்சைகட்டி வாகான குதிரைஏறி ,,
சத்தியமாய்ப் பாராளும் மன்னர்எல்லாம்
[போற்றிநிற்க ,,
பாரோங்கும் பதினெட்டாம் படிக்கருப்பர் ,,
கூர்அறிவாள் மீதேறி நின்றுவிளை யாடுவதற்கு, ,,
தேசத்து ஞாயமெலாம் தீர்ப்பதற்குத் துடிக்கருப்பர் ,,
வம்புசெயும் கள்ளப்பி சாசுகளை ஓட்டிவைக்க ,,
வள்ளலைப்போல் தந்துஉதவி ஏழைகளை ஆதரிக்க ,,
சேமம் குதிரைதனில் வேகமாய் ஓடிவாரார் ,, 17

# கருப்பர் அகவல்

## காப்பு

தார்உலவு திண்புயத்தான்
தல்லா குளத்தில்வளர்
கார்உலவு மேனிக்
கருப்பணன்மேல்—சீர்உலவு
செஞ்சொல் அகவலுக்குச்
சித்தி விநாயகனர்
கஞ்சமலர்த் தாள்இணையே காப்பு. 18

## அகவல்

பூங்கமுகு, வாழை, புகழ்க்கோதை பூவில்உயர்
தேங்கு,பலா மா,இலுப்பை, செம்பிலவு பாங்கான
ஆச்சா, கொழுமிச்சை, ஆல்,அரசு முந்திரி,பேர்
ஈச்சை, விருச்சி, எலுமிச்சை வைத்ததொரு
தேக்கு, புளி,வேம்பு, சீனிப் பலாஉலவு

நாக்கரசு, நீள்மருது, நாருத்தை, ஆக்கமுடன்
வாச்ச கனிக்காயும் மந்திகளும் வன்கவியும்
கூச்சம்அறப் பாய்ந்து குதிகொண்டு கூடியே
ராச்சதக்கூத் தாடிவிளை யாடையிலே, அக்கனிகள்
சாடி உடைந்து,ரசச் சாறெல்லாம் ஓடிவந்து

வெற்பைவிட்டுக் கீழ்இறங்கி, மேல்புறமும் கீழ்ப்புறமும்
அற்புதமாய் வெள்ளம்எடுத்து ஆருக ஓடிவரும்
ஐயர் மதுரை அழகுப் பதிதன்னில்
வையையிலே சித்திரையில் வந்துஇறங்கும் மால்அழகர்;
தென்இலங்கை வாள்அரக்கன் சென்னிபத்தும் அற்றுவிழத்

துன்னு சிலைவளைத்த சோலை மலைஅழகர்;
கூனிக் கொடியாள் கூன்நிமிர உண்டைஎய்து,
மான்மரிய வாளிதொட்ட சோலை மலைஅழகர்;
இலகு,வாய் நின்றபதி னெட்டாம் படிக்கருப்பர்,
நீலப் பரியார் நெடிய முழுக்கருப்பர்,

ஓங்கு புகழ்உரைத்தல் சோலைமலை மட்டிலுமோ?
துய்யவட காவேரி, மேலை மலையாளம்,
கண்ணனூர், மாரி கரகத்தை யும்காத்தே,
இலங்குடியூர், சிங்கையூர், கீரணியூர், தென்னிளசை
கமல மங்கையூர் உலாவுகட்டு மாவடியும்

நத்தூரும் நெல்லை நகர்நேமம் கோட்டூர்,
மெத்தமகிழ் மாம்பூண்டி. கொரட்டி, திருப்புத்தூர்,
நாட்டரசன் கோட்டையிலும் நண்ணியே, பாட்டிலுரை
பேர்படைத்துப் பூசைகொண்டு பேருலகெ லாம்விளங்கும்
கார்படைத்த மேனிக் கருப்பண்ண சாமியவன்,

சீர்படைத்த செங்கண்மால் செய்ய சகோதரியாள்
சித்திரையில் வைகைதனில் சிவனார்க்கு மாலையிடத்
தக்கஅலங் காரம் தான்செய்து, பாரிலுள
மிக்கபல சாமானும் மேலான சீதனமும்
அற்புதம்சேர் மண்டபமும் அச்சுதனார் சொற்படிக்கு

எல்லாமும் சேகரிக்க, இப்புவிஎ லாம்தழைக்க,
தல்லா குளத்தில்வந்த சாமி கருப்பண்ணன்,
‘அஞ்சல்’என்று சொல்லி அருளும் தனக்காரன்,
வம்புசெய்யும் கள்ளப் பிசாசுகளை வாயடக்கி,
கால்விலங்கு போட்டுமரத் தாணி தனில்அறைவோன்,

வள்ளல்போல் தந்துஏழை மக்களை ஆதரித்தே
தள்ளரிய ஐந்துஅர்வாள் தந்த அலங்காரன்,
சுந்தரனார் தொல்மதுரை வைகைப் பெருநதியில்
கந்தன்என வந்த கருப்பண்ண சாமியவன்,
சத்தியந்தில் மெய்யறியாத் தர்மமில்லா வீணர்களைத்

துண்டுசெயும் கைஅரிவாள் தூக்கு கருப்பண்ணன்,
ஐயமின்றி ஏற்க நடக்கும் அடியாரைப்
பூவுலகம் பாதாளம் பொன்னுலகம் எங்குமே
காவல் கொண்டு காக்கும் கருப்பண்ணன்,
செந்தமிழ் வல்லோர் சீர்பரவு கருப்பண்ணன்,

காரிட்ட கொண்டையிலே கட்டியதா யத்தழகும்
தாரிட்ட முல்லைச் சரக்கொத்தும் சந்திரச்
சீரிட்ட காவிச் சரிகை உருமாலும்,
சுந்தரம்சேர் முத்துத் துராயழகும், தூய
முந்துநுதல் கஸ்தூரிப் பொட்டும், முகத்தழகும்

முத்துக் கடுக்கன் முருகழகும் மூக்கும்,
சிவந்த முருக்கிதழும் தேமதுர வாக்கும்,
வனச மலர்க்கரமும் மார்பில் சரப்பளியும்,
நல்லசமு தாடனைத்துக் கொள்மருங்கில் கச்சையின்மேல்
ஆடகத்தால் செய்த அரிய அரைஞாணும்

சோடான தங்கக் கொலுசோடு பொற்சிலம்பும்
இப்படியாய் விற்றிருக்கும் எங்கள் கரும்பண்ணன்,அடி
பணிந்தேன், பதம்பெற்றேன், பவவினையைத் தீர்த்தேன்;
கருப்பண்ணன் மேல்சொன்ன கவியதனை ஓதுவார்
திருப்பெற்று வாழ்வர் திகழ்ந்து.

பாடல் எண் 19



அடைக்காத்தாள்

## அடைக்காத்தாள்

பூதலம் முற்றையும் ஆளும்
மனோன்மணி, பூரணியே!
காதோலை, கொப்புக் கடுக்கன்,
முருகு கனம்பொருந்தத்
தீதுவ ராமல் அடியாரைக்
காக்கின்ற செல்வி,என்னை
ஆதர வாய்வந்து காப்பாய்!
அடைக்கலம் காத்தவளே! 20

கொங்கை இரண்டும் குலுங்க,
சரப்பள்ளிக் கோவையொடு
தங்கக் கிரீடம் தலையினில்
தாங்கித் தருக்குடனே
சிங்கார மாகக் கறுப்பண்ணன்
வாசலில் சேர்ந்துநிற்க,
எங்களைக் காப்பாய், அடைக்கலம்
காத்தவள் ஈச்வரியே! 21

முன்கை வளையும் முருக்குட-
னே,சொர்ண மோதிரமும்
தங்கக் கடையம் சரிகை
உடுப்பும் சலசலென,
பங்கயப் பாதச் சதங்கைகள்
கொஞ்சும் பராபரியே!
எங்களைக் காப்பாய்! அடைக்கலம்
காத்தவள் ஈச்வரியே! 22

பார்வை வடக்கினில் பார்த்திடும்
மாது பயிரவியே!
மார்பில் பதக்கம் மணிமுத்துக்
கோவை வளம்பொருந்தச்
சேவைகள் செய்தே அடியார்
பரவித் தினம்துதிக்கச்
சோர்வு தொலைக்கும் அடைக்கலம்
காத்தவள் சுந்தரியே! 23

ஆரம் கொளும்வட வாசல்
இருந்திடும் ஆனந்தியே!
வாரங்கள் தோறும் அபிடேகம்
செய்து மகிழ்வுகொண்டு
நேரங்கள் தோறும் அடியார்கள்
நித்தம் நினைத்துதிக்கும்
சாரம் தருவாய்! அடைக்கலம்
காத்தவள் சங்கரியே! 24

அருமா மறைபுகழ் மீனாட்சி
ஆகிய அந்தரியே!
திருமால் சகோதரி! செண்பக
வல்லி! செகம்தனிலே
மருமா மலர்தும்பை மல்லிகை
முல்லை மலர்அணிந்த
கருணை கடாட்சி! அடைக்கலம்
காத்தவள் கண்மணியே! 25

நாரணன் சோதரி, நம்பர்க்கு
நல்வரம் நல்கு,பரி
பூரணி வே,தன் மகனுக்கு
உரிய புரந்தரியே!
பார்உலகு உய்யக் கணபதி,
கந்தன் பயந்தெடுத்த
காரணி எங்களைக் காப்பாய்!
அடைக்கலம் காத்தவளே! 26

அமரர் பணியும் செகதேவி,
அம்பிகை ஆண்டு அருளி
எமன்அணு காமலே நல்வரம்
ஈந்தெனைக் காத்திஅம்மா!
விமலி,சா முண்டி, கருணா-
கரி,இந்த மேதினியில்
கமலா சனத்தினில் மேவி
அடைக்கலம் காத்தவளே! 27

பெண்மாயை தன்னில் அலையாமல்
என்தனைப் பேணிநிதம்
நண்ணாத நல்வரம் தந்துமே
பேரின்பம் நல்குவையே;
விண்ணோர்கள் போற்றிடும் நித்யகல்-
யாணி! விமலி! கடைக்-
கண்ணாலே பார்த்தெனைக் காப்பாய்,
அடைக்கலம் காத்தவளே! 28

அருமைய தாக அடியாரை
ஆள்கின்ற ஆதிசத்தி!

உரிமைய தாகஎன் உள்ளத்து
உறைகின்ற உத்தமியே!

இருபதம் தந்துநின் தொண்டு,ஊ-
ழியம்செய்து இருக்கஎன்றும்

கருணை புரிந்துஎன்னைக் காத்தி!
அடைக்கலம் காத்தவளே! 29

திருவள ரும்கொரட் டிப்பதி
மேவு திகம்பரியே!

தருவளர் ராச புரம்ஆம்
நகரில் உன்கவிஞன்,

பெரியண்ண தாசன், தமிழுக்கு
இரங்கிப் பிரியமுடன்

கருணை புரிந்துஎனைக் காப்பாய்!
அடைக்கலம் காத்தவளே! 30

உ

# சுவாமியே சரணம் ஐயப்பா




ஹரி ஹர சுதன் ஆனந்த சித்தன்
ஐய்யன் ஐயப்ப சுவாமியே
சரணம் ஐயப்பா

## பாட்டு

சுவாமிசரணம் சரணமென்றய்யப்பா
சுவாமியல்லாது சரணமில்லை
கார்த்திகைமாதம் பிறந்தமுதல்தினம்
நேர்த்தியாய் முத்திரை மாலையிட்டு

மண்டலமொன்று கழிந்திடும் நாளினில்
சுவாமியை தியானித்து பக்தியோடு
இருமுடி தாங்கியே கைக்கோலும் கொண்டங்கு
பேட்னடயில் சேர்ந்ததும் ஆடிப்பாடி

கூட்டமாய் வாவரு சுவாமியை வணங்கி
வாட்டம் இல்லாமல் நடந்துசென்று

நாட்டின் அதிபனும் ஐயப்பன் வாழ்ந்திடும்
கோட்டைப்படியையும் தாண்டிச்சென்று
பேருவாம் அருவியில் முறையாக நீராடி
கானக மார்க்கமாய் சஞ்சரித்து

கீர்த்தனம்பாடி பரவசமாகவே
ஆனந்தமான அழுதைநதி
தீர்த்தத்தில்முழுகி கல்லொன்றெடுத்துபின்
கல்லிட்டு கல்லிடும் குன்றிலேறி

கரடிகள் வேங்கைகள் குடிகொண்டிருக்கின்ற
கரிமலைச்சாரலும் கடந்துசென்று
பாவங்கள் போக்கிடும் பம்பா நதியினில்
பரிசுத்தமாக குளித்தெழுந்து

தானங்கள் தருமங்கள் தூயமனதுடன்
வேண்டுமளவுக்கு செய்த உடன்
நீலவான்தன்னோடு கொஞ்சிவிளையாடும்
நீலிமலைதன் முகட்டிலேறி

சபரியும் அன்று தவம்செய்திருந்ததோர்
சபரிமலையும் கடந்து சென்று
விரைவோடு சென்றங்கு கும்பளம்என்றதோர்
அருவியின் தீர்த்தத்தில் குளித்தெழுந்து

கனிவோடு மாளிகை தன்னில்வசித்திடும்
தேவியை போற்றி துதித்தெல்லோரும்
எண்ணிப்படி பதினெட்டும் கரையேறி
பொன்னம்பலம் கண்டு கண்குளிர்ந்து

ஹரிஹரமைந்தனின் பாதமலர்கண்டு
பரவசமாகப் பணிந்திடுவோம் 31
சுவாமியே சரணம் ஐயப்பா.

**சரணம் சரணம் பொன்னய்யப்பா**

சரணம் சரணம் சரணம் பொன்னய்யப்பா!

சுவாமி ,, ,, ,,

அய்யனே ,, ,, ,,

சுவாமியே சரணம் சரணம் ,,

அரிஹரசுதனே ,, ,,

ஆபத்பாந்தவா ,, ,,

இன்னல் தீர்ப்பவனே ,, ,,

ஈஸ்வரன் புதல்வனே ,, ,,

உலகநாயகனே ,, ,,

ஊக்கம் அளிப்பாய் ,, ,,

எங்கள் குலதெய்வமே ,, ,,

ஏழைபங்காளனே ,, ,,

ஐங்கரன் தம்பியே ,, ,,

ஒப்பற்றசீலனே ,, ,,

ஓவியப்பிறப்பே ,, ,,

ஔதாரிய விரனே ,, ,,

அகிலலோக நாயகனே ,, ,, 32

## 26

### மணிகண்டன் சரணம்

| | | |
|---|---|---|
| 1 | மணிகண்டா | மணிகண்டா |
| | மாமலை வாசா | ,, |
| | மானுஷரூபா | ,, |
| | சரணம் சரணம் | ,, |
| 2 | ஹரிஹர சுதனே | ,, |
| | மோஹினி சுதனே | ,, |
| | மோகன ரூபா | ,, |
| | சரணம் சரணம் | ,, |
| 3 | பம்பாவாசா | ,, |
| | பந்தள ராசா | ,, |
| | பரமதயாளா | ,, |
| | சரணம் சரணம் | ,, |
| 4 | ஆபத் பாந்தவா | மணிகண்டா |
| | அனாதரக்ஷகா | ,, |
| | ஆனந்த ரூபா | ,, |
| | சரணம் சரணம் | ,, |
| 5 | பக்தவத்ஸலா | ,, |
| | பக்தர்கள் போற்றிடும் | ,, |
| | பக்தர்க்கிரங்கிய | ,, |
| | சரணம் சரணம் | ,, |
| 6 | சத்ரு சம்ஹார | ,, |
| | சாஸ்வத மூர்த்தே | ,, |
| | சபரி கிரீஸ்வரா | ,, |
| | சரணம் சரணம் | ,, |

## நாராயணம் பஜே

நாராயணம் பஜே நாராயணம்
லெக்ஷிமி நாராயணம் பஜே ,,
ஹரிநாராயணம் பஜே ,,
சிவ நாராயணம் பஜே ,,

அங்கு மிங்கு மெங்குமே ,,
அண்ட சரா சரமே ,,
அண்டம் முதல் பிண்டம் வரை ,,
ஆனந்த மானதொரு ,,

ஓங்கி வளர்ந்ததுவே ,,
ஓங்காரப் பொருளாய் வந்த ,,
ஹரி ஹர சுதனே ,,
அநாத ரக்ஷகனே ,,

பம்பையில் பிறந்தவனே ,,
பந்தள மைந்தனே ,,
பக்த சொரூபனே ,,
பக்தர்களைக் காக்க வந்த ,,

மோஹினி சுதனே ,,
மோகன ரூபனே ,,
மோக்ஷ மளிப்பவனே ,,
மோகன மந்திரமும் ,,

ஐந்தெழுத்து மானதொரு ,,
ஐம்பத்தோர் அக்ஷரமும் ,,
அகரமுதல் மற்றதெல்லாம் ,,
ஆனந்த மூர்த்தியே ,,

மஹிஷி சம்ஹாரனே நாராயணம்
மாநிலம் புகழவந்த ,,
மங்காத ஜோதிமயம் ,,
மாதவம் புரிவது ,,

சித்தி முத்தி கொடுப்பது ,,
சித்தர் ரிஷியைக் காப்பது ,,
சின்மை யானந்தமே
சிங்கம் புலி வாஹனவே ,,

வேட்டுப் பிரியனே ,,
வேட்டைக் கதிபதியே ,,
வேண்டும் வரம் அளிப்பவனே ,,
வேதாந்த மூர்த்தியே ,,

கருணைக் கடல் வண்ணனே ,,
காருண்ய வாரிதியே ,,
கன்னிமார் தொழுவதும் ,,
கன்ய குருமார் தொழுவதும் ,,

ஹரி நாராயணம் பஜே 34

# பதினெட்டாம்படியின் மகிமை

## சுவாமியே சரணம் ஐயப்பா

ஒன்றுந்திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

இரண்டாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொருதீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

மூன்றும் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

நான்காம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

ஐந்தாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

ஆறும் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

ஏழாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

எட்டாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

ஒன்பதாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பத்தாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமிபொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதினொன்றும் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பன்னிரெண்டாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொகு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதின்மூன்றும் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதிநான்காம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதினைந்தாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதினாறும் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதினேழாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

பதினெட்டாம் திருப்படி சரணம் பொன்னய்யப்பா
அதிலொரு தீபம் சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா

திருப்படி பதினெட்டும் சரணம் பொன்னய்யப்பா
சுவாமி பொன்னய்யப்பா
ஐயனே பொன்னய்யப்பா
சுவாமியே சரணம் சரணம் பொன்னய்யப்பா 35

சுவாமியே சரணம் ஐயப்பா

வான்முகில் வழாது பெய்க!
மலிவளம் சுரக்க! மன்னன்

கோல்முறை அரசு செய்க!
குறைவுஇலாது உயிர்கள் வாழ்க!

நான்மறை அறங்கள் ஓங்க!
நல்தவம் வேள்வி மல்க!

மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக! உலகம் எல்லாம். 36

திருச்சிற்றம்பலம்

# பிழை திருத்தம்



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 2 | உடுளுதே | உருளுதே |
| 9 | 10 | கருஞ்சங் | கடுஞ்சங் |
| 21 | 20 | நல்வவையே | நல்சுவையே |



சேமங் குதிரை, கொரட்டி.

S. I. P. Kkdi.